

# மாரிகாலக் கதை

ஸிஸிலி என்பது ஐரோப்பா கண்டத்தில் இற்றலி தேசத்தின் தென்மேற்கேயுள்ளதொரு தீவு. லியான்டீஸ் என்பவன் அந்தத் தீவுக்கு அதிபதியாவன். அவனுடைய மனைவியாகிய எர்மியான் என்பவள் அழகிலும் குணத்திலும் சிறந்தவள்.

சிலகாலம் அவர்கள் இருவரும் அந்நியோந்நியமுற்று அமைதியுடன் வாழ்ந்துவந்தனர். லியான்டீஸ் என்பவன் தன் மனைவியின் காதலில் மகிழ்வுற்று மூழ்கி யிருந்தனன். அவனுக்கு ஒரு விதத்திலும் இன்பக் குறைவே இல்லை. தன் மனத்திற்குத் திருப்தி யுண்டாக்கத்தக்க காரியங்களையெல்லாம் அவன் செய்து முடித்தான்.

ஆயினும், ஒருநாள் ஒரு குறை மாத்திரம் அவனுக்குத் தோன்றியது. அந்தக் குறையாவது, இளமையில் தனக்கு நேசனும் பள்ளித் தோழனுமாக இருந்த பாலிக்ஸினீஸ் என்பவனைக் காணாததேயாம். அவனைப் பார்த்துக் களிப்புறுவதன்றி, அவனைத் தன்னுடைய ராணிக்கும் பரிச்சயம் செய்து வைக்கவேண்டுமென்று லியான்டீஸ் விரும்பினான்.

சிறு பிராயம் முதல் அவர்கள் இருவரும் ஒருமித்தே வளர்ந்து வந்தார்கள். ஆனால், அவர்களுடைய தந்தைமார் காலகதி யடைந்தமையின் அவர்கள் தத்தம் ராஜ்யாதிகாரங்களை வகித்து நாடாட்சி செய்ய வேண்டியதாயிற்று. லியான்டீஸ் என்பவன் ஸிஸிலிக்கு அரசனானன்; பாலிக்ஸினீஸ் என்பவன் ஆஸ்திரியா தேசத்தின் வடபாகத்தி லுள்ள பொகீமியா என்னும் ராஜ்யத்திற்கு அதிகாரியானன். பிறகு, அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துப் பேசிக் கொள்வதற்கு அனேக ஆண்டுகளாகச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. ஆனால், அவர்கள் அடிக்கடி உத்தரப் பிரதி யுத்தரங்கள் அனுப்புவதும், அன்புக் குறியாக வெகுமதிகள் அனுப்புவதும், தமது பிரேமையைத் தெரிவிக்கத் தூதுகள் அனுப்புவதும் உண்டு.

பல தடவைகளில் லியான்டீஸ் என்பவன் தன்னுடைய ராஜதானிக்கு வரும்படி பாலிக்ஸினீஸை அழைத்தும் அவன் வரவில்லை. முடிவில், ஒருநாள் பொகீமியாவினின்று புறப்பட்டு பாலிக்ஸினீஸ் என்பவன் தன்னுடைய நண்பனாகிய லியான்டீஸைப் பார்க்கும் பொருட்டு ஸிஸிலி ஸம்ஸ்தானத்திற்கு விஜயஞ் செய்தான்.

அவனுடைய விஜயத்தினால் லியான்டீஸுக்கு முதலில் சந்தோஷமே உண்டாயிற்று. தன்னுடைய நண்பனை நன்றாக விசாரித்து உபசரிக்கும்படி அவன் தன் ராணிக்குச் சொன்னான். சிறுபிராயத்துச் சிநேகனுடன் சேர்ந்திருப்பதே சொர்க்கமெனவும், இனித் தனக்கு ஆகவேண்டியது ஒன்றுமே இல்லையெனவும் அவன் பரமானந்தப்படுவதாகத் தோற்றிற்று.

அவர்கள் பழைய காலத்தைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள்; பள்ளிக்கூடத்திற் படித்துவந்த நாட்களையும்,

வாலிபச் சேஷ்டைகளையும் ஞாபகப்படுத்திக் கொண்டார்கள்; அவைகளை யெல்லாம் ராணி எர்மியானுக்கு எடுத்துரைத்தார்கள். அந்த விருத்தாந்தங்களை அவள் ஆசையுடன் கேட்டு, ஆனந்தமாகப் பேசிக்கொண் டிருந்தாள்.

சிறிது காலம் ஸிஸிலி ஸம்ஸ்தானத்தில் இருந்த பிறகு, பாலிக்ஸினீஸ் என்பவன் தன் ஊருக்குப் போகப் புறப்பட்டான். அப்பொழுது, இன்னுஞ் சிலநாள் தன் அரண்மனையில் இருக்கவேண்டு மென்று அவனை லியான்டீஸ் வேண்டிக் கொண்டதன்றி, தன் ராணியாகிய எர்மியானைக் கொண்டும் அவனை வேண்டிக்கொள்ளச் செய்தான்.

அதுமுதல், சீலவதியான அந்த ராணிக்குத் துக்ககாலம் தொடங்கிற்று. லியான்டீஸ் கேட்டுக்கொண்டதற்கு இணங்காத பாலிக்ஸினீஸ், ராணியாகிய எர்மியானுடைய இனிய மொழிகளுக்கு இசைந்து, அங்கே இன்னும் சிலநாள் தங்கியிருக்க ஒப்புக் கொண்டான். தன்னுடைய வார்த்தைகளுக்கு இணங்காமல் அவன் எர்மியானுடைய மொழிகளுக்குக் கட்டுப்பட்டுப் பிரயாணத்தை ஒத்தி வைத்துக் கொண்டதனால், லியான்டீசுக்கு ஆக்கிரகம் பிறந்தது.

நண்பனாகிய பாலிக்ஸினீஸின் நற்குணங்களும், வாய்மையும், உத்தம சரிதையும் லியான்டீசுக்கு நன்கு தெரியும்; தன்னுடைய ராணியின் சீலமும், கற்பும் அவனுக்கு மனமாரத் தெரிந்த விஷயங்களே. எனினும், அவனுக்கு அடக்க வொண்ணாத அசூயை பிறந்தது; அதனால் உண்டான தாபத்தை அவன் தாள முடியவில்லை.

பாலிக்ஸினீஸைச் செம்மையாக உபசரித்து ஆதரிக்க வேண்டு மென்று அவன் எர்மியானுக்குக் கட்டளை யிட்

டிருந்தா னல்லவா ? அந்தக் கட்டளையின்படி அவள் அவனுக்கு உபசாரங்கள் செய்து வந்தாள். அவள் அவ்வாறு பாலிக்ஸினீஸை உபசரிப்பது தன் கணவனாகிய லியான்டீசைக் களிப்பிக்கும் பொருட்டே யல்லவா ?

அவள் பாலிக்ஸினீசுக்குச் செய்யும் உபசாரங்களைப் பார்க்கப் பார்க்க, லியான்டீசுக்கு வயிற்றெரிச்சல் அதிகமாயிற்று. பாலிக்ஸினீஸி னிடத்தில் அவனுக்கு இருந்த அந்தரங்கமான நட்பு அற்றுப் போயிற்று ; கற்பிற் சிறந்தொழுகும் ராணி எர்மியா னிடத்து அவனுக்கு இருந்த காதலும் நம்பிக்கையும் ஒழிந்து போயின. அவைகளெல்லாம் போனவுடனே, கொடுமையும் குத்திரமும் அவனுடைய மனத்திற் குடிகொண்டன. அவன் அரக்கனைப் போல வியவகரிக்க லானான்.

தன்னுடைய ஸம்ஸ்தானத்துப் பிரபுக்களுள் ஒருவனை காமிலோ என்பவனை வரவழைத்து, தன் மனத்தில் தோன்றியுள்ள சந்தேகத்தை அவனுக்கு எடுத் துரைத்து, பாலிக்ஸினீசுக்கு விஷமிட்டு அவனைக் கொல்லும்படி சட்டளை யிட்டான்.

காமிலோ மிகவும் நல்லவன். லியான்டீசுக்கு உண்டாகிய சந்தேகமும் பொறாமையும் வீண் ; பாலிக்ஸினீஸின்மீதாவது, ராணியின் மீதாவது சந்தேகப்படுவதற்குச் சிறிதும் காரணம் இல்லை ; அவர்கள்மீது அநுமானப்பட்டுத் தண்டிப்பது அடாது என்று காமிலோவுக்கு நன்றாய்த் தெரியும்.

ஆதலால், அவன் விஷமிட்டுப் பாலிக்ஸினீஸைக் கொல்லாமல் தன் யஜமானனாகிய அரசனுடைய கட்டளையின் விவரத்தை அவனுக்கு எடுத்துச் சொல்லி, அவனுடன் தானும் புறப்பட்டு, ஸிஸிலி ராஜ்யத்தை விட்டு

வெளியேறிச் செல்வதற்கு உடன்பட்டான். அவனுடைய சகாயத்தினல் பாலிக்ஸினீஸ் க்ஷேமமாகத் தன்னுடைய ராஜ்யமாகிய பொஹீமியாவுக்குப் போய்ச் சேர்ந்தான். அது முதல் காமிலோ அவனுடைய ஸம்ஸ்தானத்திலே இருந்து, பாலிக்ஸினீசுக்கு அந்தரங்க சிநேகனுக விளங்கிவந்தான்.

அப்படிப் பாலிக்ஸினீஸ் தப்பியோடிப்போனதனுல், லியான்டீஸுக்குக் கோபமும் பொருமையும் மிகுந்தன. அவன் ராணிவாஸத்திற்குச் சென்முன். அப்பொழுது அவள் அருமைப் புதல்வனுகிய மாமிலஸ் என்பவனேச் சீராட்டிக்கொண் டிருந்தாள். அந்தக் குழந்தை தனக்குத் தெரிந்த கதை ஒன்றைச் சொல்லித் தாயாரைக் களிப்பித்துக் கொண் டிருந்தான். லியான்டீஸ் அங்கே போனவுடனே, அவளிடத்தி லிருந்து குழந்தையை இழுத்து எடுத்துக்கொண்டு, எர்மியானேச் சிறைச்சாலேக்கு அனுப்பி விட்டான்.

மாமிலஸ் என்பவன் சிறிய குழந்தையாயினும், தாயாரிடத்து மிகுந்த அன்பு வைத்திருந்தான். அவளுடைய கௌரவத்தைக் குலேத்து, அவளேச் சிறையி லடைத்ததைக் கண்டு அவன் மிகவும் மனமாழ்ந்தான். அந்தத் துயரத்தினுல் அவன் நாளுக்குநாள் மெலிந்து ஒடுங்கிப் போனுன்; அவனுக்குப் பசி, தாகம், தூக்கம் முதலியன ஒழிந்தன; விசனத்தினுல் அவனுக்குப் பிராணன் போய்விடுமென்று சொல்லும்படி அவன் இருந்தான்.

ராணியைச் சிறைச்சாலேக்கு அனுப்பிவிட்டு அரசன் கிளியோமினீஸ், டையான் என்னும் பிரபுக்களே வரவழைத்து, டெல்பாசுக்குப் போய்வரும்படி கட்டளேயிட்டான். அங்கே, அபாலோவின் கோவிலில் குருமார் ஆவேசபரவச

ராகி வருங் காரியம் உரைப்பதும், சந்தேகந் தீர்ப்பதும், குறி சொல்வதும் வழக்கம். அந்தக் கோவிலுக்குப் போய்த் தன்னுடைய மனைவி கற்புநிலை தவறினவளாவென்று கேட்டுத் தெரிந்துகொண்டு வரும்படி அரசன் அந்தப் பிரபுக்களை அனுப்பினான்.

எர்மியான் சிறைச்சாலையில் இருக்கையில் ஒரு பெண் சிசுவைப் பெற்றாள். அவள் அந்த மகவைக்கண்டு மகிழ்ந்து, "இளங் கைதியே! நீ எவ்வளவு நிரபராதியோ, நானும் அவ்வளவு நிரபராதி" என்று அடிக்கடி சொல்லித் தன் நிலைமையை நினைந்து வருந்துவாள்.

அன்டிகோனஸ் என்பவன் ஸிஸிலிதேசத்துப் பிரபுக்களுள் ஒருவன். அவனுடைய மனைவியாகிய பாலினா என்பவள் பெருந்தன்மை வாய்ந்தவள். அவளுக்கு எர்மியானிடத்தில் அதிகப் பிரீதி உண்டு. ராணிக்குக் குழந்தை பிறந்திருக்கிறதென்று கேள்வியுற்றவுடனே, அவள் அடைபட்டிருந்த சிறைச்சாலைக்குப் பாலினா போனாள்.

சிறைச்சாலையில் எர்மியானுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த எமிலியா என்பவளைப் பார்த்து, "நான் இங்கே வந்திருக்கிறேனென்றும், என்னை நம்பி மகாராணி தன் கைக்குழந்தையைக் கொடுத்தால், அதன் தந்தையாகிய அரசனிடத்தில் அதைக் கொண்டுபோய்க் காட்டுகிறேனென்றும் மகாராணிக்கு விண்ணப்பஞ் செய். நிரபராதியாகிய இந்தக் குழந்தையைக் கண்டமாத்திரத்தில் அரசனுடைய மனம் இளகாதா?" என்று பாலினா சொன்னாள்.

"உத்தமியே! நீ சொல்லிய வர்த்தமானத்தை மகாராணிக்குத் தெரிவிக்கிறேன். பெருமனத்துடன் நீ இந்தக் காரியம் செய்வது மகாராணிக்குப் பேருபகாரமாகும். இந்தச் சிசுவை இதன் தந்தையாகிய அரசனிடத்திற்

கொண்டுபோய்க் காண்பிக்கத் தக்க தோழி எவளேனும் வாய்க்க மாட்டாளா என்று மகாராணி இன்றையதினங் கூடச் சொல்லித் துக்கித்துக்கொண் டிருந்தாள்'' என்று எமிலியா பதில் சொன்னாள்.

அதைக் கேட்டுப் பாலினா, "லியான்டீஸினிடத்தில் தைரியமாக நான் அவளுக்குப் பரிந்து பேசுவேன் என்று ராணியினிடம் சொல்லு'' என்றாள். "எங்கள் மகாராணியின் விஷயத்தில் இவ்வளவு அன்புகொண்டிருப்பதற்காகக் கடவுள் உனக்குச் சகல சௌபாக்கியங்களும் அளிப்பாராக!'' என்று பாலினாவை வாழ்த்திவிட்டு, எமிலியா மகாராணியினிடம் சென்று இந்த வர்த்தமானத்தைத் தெரிவித்தாள்.

குழந்தையை எடுத்துக்கொண்டு போய்த் தைரியமாக அதன் தந்தையினிடத்திற் காண்பிப்பதற்கு எவரும் துணியாரென்று எர்மியான் வருந்திக்கொண் டிருந்தவளாதலின், அந்தக் காரியத்தைப் பாலினா மேற்கொண்டாளெனத்தெரிந்த வுடனே, அவளிடத்தில் எர்மியான் தன் குழந்தையை ஒப்புவித்து விட்டாள்.

சிசுவைக் கையில் ஏந்திக்கொண்டு பாலினா அரசனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள். அங்கே, அவளுடைய கணவனாகிய அன்டிகோனஸ் என்னும் பிரபு அவளைப் பார்த்து, "அரசனிடத்திற்குப்போகாதே. அவன் மிகக் கோபப்படுவான்'' என்று தடுத்தான். அவன் எவ்வளவு சொல்லியும், அவள் கேளாமல் துணிவுகாட்டி, நியாயத்தை எடுத்துரைக்கலானாள். அந்தச் சச்சரவைக் கேட்டு,

அரசன் — அங்கே என்ன கூச்சல் ?

பாலினு — இறைவ! கூச்சல் ஒன்றும் இல்லை. தங்களுடைய நன்மையைக் கருதிச் செய்யும் மிக அவசியமான சம்பாஷணமே.

அரசன் — அது என்ன! அந்தத் துணிச்சற்காரியை அப்புறப்படுத்து! அன்டிகோனஸ்! அவளை இங்கே வரவொட்டாதே யென்று உனக்குச் சொல்லி யிருந்தேனே? அவள் வருவாளென்று தெரிந்தே சொன்னேன்.

அன்டிகோனஸ் — அவளுக்கு அப்படியே சொல்லியிருந்தேன். இங்கே வந்தால், மகாராஜாவுக்கும் எனக்கும் மிகுந்த கோபம் உண்டாகுமென்ற சொன்னேன். தங்களுடைய சமுகத்திற்குப் போகக்கூடா தென்று அவளுக்குச் சொன்னேன்.

அரசன்—என்ன! அவளை உன்னுல் அடக்கமுடியாதா?

பாலினு — அநீதி செய்யாமல் அவர் என்னை அடக்கலாம், அயோக்கியமான காரியம் செய்யாமல் தடுக்கலாம். ஆனுல், இந்த விஷயத்திலோ, அவர் என்னை அடக்க முடியாது; அடக்க முடியாதென்பது நிச்சயம். மீறி, என்னை இந்த விஷயத்தில் அடக்க வேண்டுமானுல், அவர் நீங்கள் செய்தபடி செய்யவேண்டும். அதாவது, யோக்கியமான காரியஞ்செய்ததற்காகக் குற்றஞ்சாட்டிச் சிறையிலடைக்க வேண்டும்.

அன்டி — கேட்டீர்களா! அவள் விறைத்து எதிர்த்துக் கடிவாளவாரைப் பிடுங்கிக் கொண்டால், அவள் போகிற வழியிலே ஓடட்டுமென்று நான் விட்டு விடுவேன். ஆனுலும், அவள் இடறி விழமாட்டாள்.

பாலினு — மகாப்பிரபுவே! இதோ வந்து விட்டேன். என்னுடைய விண்ணப்பத்தைச் சற்றுச் செவிக்கொள்ளப் பிரார்த்திக்கிறேன். நான் தங்களிடத்தில் ராஜபக்தி

மிருந்த ஊழியக்காரி, தங்கள் பிணியை யகற்றவல்ல மருத்துவச்சி, மிகவும் பணிவாக நல்லாலோசனை சொல்லத்தக்கவள். ஆயினும், தங்களுடைய துன்பங்களைத் தொலைக்கும் பொருட்டு நான் அப்படித் தோற்றும விருக்கிறேன். தங்களுக்கு உற்றவர்களென்று தாங்கள் நினைத்திருக்கிறவர்கள் நடிப்பது போல நானும் நடிக்காமல், இப்படி இருக்கிறேன். இப்பொழுது நான் உத்தமியாகிய தங்களுடைய ராணியினிடத்தி லிருந்து வருகிறேன்.

அரசன் — உத்தம ராணியா!

பாலினு — ஆம், பிரபுவே! உத்தம ராணி, உத்தமியாம் ராணி; தங்கள் ராணி உத்தமியே என்று சொல்லுகிறேன். நான் ஆண் பிள்ளையாக இருந்தால், அவள் உத்தமி என்று சண்டை போட்டுச் சாதிப்பேன்.

அரசன் — இவளை அப்புறம் தள்ளு.

பாலினு — என்னைத் தொடுகிறவனுக்குக் கண் கெட்டுப்போகும். நானுகவே வெளியே போகிறேன். ஆனல், நான் வந்த காரியத்தை முதலிற் சொல்லி முடிக்கிறேன்.— உத்தமியாகிய ராணி தங்களுக்கு இந்தப் பெண் மகவைப் பெற்றிருக்கிறாள். குழந்தை இதோ இருக்கின்றது. இதனை ஆசீர்வதியுங்கள் (என்று குழந்தையைக் கீழே வைத்தாள்).

அரசன் — சீ! போ! இவள் பெரிய ராக்ஷசி, இவளை வெளியே கொண்டுபோ; உடனே இவ்விடத்திலிருந்து அகற்று; இவள் பெரிய சங்கதூதி!

பாலினு — அல்ல, அல்ல; எனக்கு அந்த விஷயமே தெரியாது. எனக்கு அந்தப் பெயர் வைப்பதற்குக் காரணம் உங்களுக்கு எப்படித் தெரியாதோ, அப்படியே அந்தப் பெயர் வகிப்பதற்குக் காரணம் எனக்கும் தெரியாது.

களுக்கு வெறி எவ்வளவு மிகுந்திருக்கிறதோ அவ்வளவு எனக்கு உண்மை மிகுந்திருக்கிறது. அதாவது, நீங்கள் வெறிபிடித்து நடக்கிறீர்கள், நான் உண்மையைக் கடைப்பிடித்து நடக்கிறேன். நான் உண்மையுள்ளவளென்பது உலகமறிந்த விஷயம்.

அரசன் — துரோகிகளா! இவளை வெளியே தள்ள மாட்டீர்களா? இந்தச் சோரப் பிள்ளையை எடுத்து அவளிடத்திற் கொடுங்கள். மதிமருண்ட கிழவா! மனைவியின் மொழிகளைக் கேட்டு நீ தடுமாற்றங் கொண்டிருக்கிறாய். இந்தச் சோரப்பிள்ளையை எடுத்து அந்தக் கிழ ஆட்டினிடத்திற் கொடு.

பாலினா — அரசன் அநியாயமாக ஏற்படுத்திய இழிவான தன்மையை மனத்திற்கொண்டு நீர் இந்த இளவரசியைத் தொடுவீரானால், உம்மைப் பாவம் தொடரும்!

அரசன் — இவன் மனைவிக்குப் பயப்படுகிறான்.

பாலினா — நீங்களும் அப்படியே மனைவிக்குப் பயப்படுவீர்களாக! அப்படியானால், உங்களுடைய குழந்தைகளை உங்களுடைய குழந்தைகளே என்று ஒப்புக்கொள்வீர்களென்பதற்கு ஐயமில்லை.

அரசன் — இந்தக் கும்பலில் உள்ளவர்கள் எல்லாரும் துரோகிகளே!

அன்டி — இந்தச் சூரியன் சாக்ஷியாக நான் துரோகி அல்லன்.

பாலினா — நானும் துரோகி அல்லள். இங்கே உள்ளவர்களுள் ஒருவரைத் தவிர, மற்றெவரும் துரோகி இல்லை. அந்த ஒருவர் எவரெனின், தம்முடைய பெருமையையும் தமது ராணியின் பெருமையையும், இனி அபிவிருத்தியாகத்தக்க மகனது பெருமையையும், கைக்குழந்தையின்

பெருமையையும் இகழ்ந்து, அவர்களைப் பழிப்புக்கு இட மாக்குகிறவரே. அந்த அபவாதம் கத்தியினும் கூரியது. அது — இப்பொழுது உள்ளபடி சண்டாளமான நினைவு. அதனைவிட்டு ஒழிப்பதற்கு அவர் இணங்கமாட்டார்—ஆத லால் இந்த எண்ணத்தின் மூலத்தைக் களையவேண்டும்.

அரசன் — இவள் பெரிய வாயாடி. இதுவரையில் கணவனை வாயால் அடித்து அடக்கினுள். இப்பொழுது என்னைச் சண்டைக்கு இழுக்கிருள். இந்தச் சீர்கெட்ட சிசு என்னுடைய தன்று. இது பாலிக்ஸினீஸுக்குப் பிறந் தது. இதை என்முன் வையாதே. இதையும் இதன் தாயையும் தீக்கு இரையாக்கு.

பாலினு — இது உங்களுக்குப் பிறந்ததே. 'தந்தை யைப்போல மகவு' என்னும் பழமொழிப்படி பார்த்தாலும், இது உங்கள் குழந்தையே. பிரபுக்காளா! இதோ பாருங் கள். சின்னங்கள் இன்னும் முதிரவில்லை யாயினும் இந்தச் சிசு தந்தையைப் போலவே இருக்கின்றது; தந்தையின் சொரூபம் அப்படியே அமைந்திருக்கின்றது; இதன் கண் ணைப் பாருங்கள், மூக்கைப் பாருங்கள், உதட்டைப் பாருங் கள், புருவத்தின் சுளிப்பைப் பாருங்கள், நெற்றியைப் பாருங்கள்; புருவ மையத்தையுங் கன்னங்களின் அமைப் பையுங் கவனியுங்கள்; இது சிரிக்கிற மாதிரியைப் பாருங் கள்; கையும், விரலும், நகமும், தந்தையின் அச்சே யாகும்!

அரசன் — இவள் கெட்ட இடும்பி! அன்டிகோனஸ்! இவளுடைய வாயை நீ அடக்காவிட்டால், உன்னைத் தூக்கில் இட்டுக் கொல்லலாம்.

அன்டி — அந்தக் காரியம் செய்யமுடியாத கணவர் களை யெல்லாம் தூக்கிலிட்டுக் கொல்லுவீர்களானுல், தங்க ளுடைய தேசத்தில் குடித்தனக்காரன் ஒருவனும் இரான்.

அரசன் — இதோ! மறுபடி சொல்லுகிறேன்! இவளை அப்புறப்படுத்து.

பாலிஞ — இரக்கமும் யோக்கியதையும் சிறிதும் இல்லாத பிரபு இதனினுங் கொடிய காரியம் செய்ய முடியாது.

அரசன் — உன்னைத் தீக்கு இரையாக்குவேன்.

பாலிஞ — அதற்குச் சிறிதும் அஞ்சேன். அந்தத் தீயை மூட்டுகிறவன் பதிதனே யல்லாமல், அந்தத் தீக்கு இரையாகிறவள் பதிதை யாகமாட்டாள். உங்களை யான் கொடுங்கோலர் என்று சொல்வேன். ஆனால், உங்களுடைய ராணிக்கு இவ்வளவு கொடுமை செய்வதற்கு, உங்களுடைய சபலசித்தத்தைத் தவிர வேறு குற்றகாரணம் அகப்படவில்லை. ஆதலால், இந்தக் கொடுமையினால் உங்களுக்குக் கொடுங்கோன்மை சாருகின்றது. இது உங்களுடைய பெருமையைக் குலைத்து இழிவு படுத்துவதன்றி, உலகத்தவர் உங்களைத் தூற்றுவதற்குக் காரணமாகின்றது.

அரசன் — நீ என்னுடைய ஸம்ஸ்தானத்துப் பிரபு என்பது உண்மையானால், இவளை இந்த அறையினின்று வெளியே அழைத்துக் கொண்டு போ! யான் கொடுங்கோலனே யாகின், இதுவரையில் இவளுடைய உயிர் நிற்குமா? நான் கொடுங்கோலனென்று இவள் நினைத்திருந்தால், என்னைப் பார்த்து அப்படிச் சொல்லுவாளா? இவளை அப்பால் கொண்டுபோ!

பாலிஞ—சற்றுப் பொறுங்கள், என்னைத் தள்ளாதேயுங்கள்; நானே போகிறேன்.

இறைவ! கண்ணெடுத்துத் தங்கள் சிசுவைப் பாருங்கள். இது தங்களுடையதே. இனி யான் போய்வருகிறேன்.

இவ்விதமாகப் பாலினு எர்மியானுக்காக அரசனிடத்தில் எவ்வளவு பரிந்து பேசியும், அவனுடைய கன் மனத்தை இகழ்ந்து கூறியும், குற்றமற்ற மனைவியின்மீதும் மகவின்மீதும் 'கருணைகூரும்படி பிரார்த்தித்தும் பயன் படாமற் போயிற்று. அவள் எவ்வளவு ஆக்கிரகத்தோடும் ஆர்வத்தோடும் வாதித்தனளோ, அவ்வளவு லியான்டீசுக்கு வெறுப்பு மேலிட்டது.

பாலினு புறப்பட்டுப் போகையில், அந்தச் சிசுவை அதன் தந்தையின் காலுக்கு அடியிலே விட்டுப் போனுள். சிசுவும் அவனும் தனிமையாக இருக்கையில், அவன் அதைக் கவனித்துப் பார்த்து அதன்மீது இரக்கங்கொள் வானென்று அவள் நினைத்தாள்.

அவளுடைய எண்ணம் அப்படியும் ஈடேறவில்லை. ஏனெனில், அவள் புறப்பட்டுப் போனவுடனே, அரசன் அவளுடைய கணவனுகிய அன்டிகோனஸை அழைத்து, அந்தக் குழந்தையைக் கடல்மீது எடுத்துச் சென்று ஜன சஞ்சார மில்லாத தீவாந்தரக் கரையில் அதனை மரிக்க விட்டு வரும்படி கட்டளை யிட்டான்.

நல்லவனுகிய காமிலோ முன்னர்ச் செய்ததுபோ லல்லாமல், அன்டிகோனஸ் தன் யஜமானனுடைய கட்டளைப்படியே நடந்தான். உடனே அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு கப்பலேறி, ஜனசஞ்சார மில்லாத தீவு எங்கே முதலில் அகப்படுமோ அங்கே விட்டுவிடத் தீர் மானித்துக் கடலிற் சென்ருன்.

எர்மியான் குற்றவாளியே யென்று அரசன் தன் மனத்தில் திடமாக நிச்சயித்துக் கொண்டான். ஆதலால், தெல்பாசிலுள்ள அபாலோவின் கோவிலுக்குப் போய்ப் பூஜாரிகளின் அருள் வாக்கைக் கேட்டு வரும்படி அனுப்பி

யிருந்த கிளியாமினீசும் தையானும் திரும்பி வருகிற வரையில் அவனுக்கு மனம் பொறுக்கவில்லை.

தன்னுடைய உயிருக்கு உயிராக இருந்த சிசுவை இழந்த துக்கத்தி னின்று எர்மியான் தெளிந்தெழு முன்னே, அரசன் அவளைத் தன் ஸம்ஸ்தானத்துப் பிரபுக்களின் சபையில் விசாரணைக்குக் கொண்டுவந்து நிறுத்தினான். நாட்டிலுள்ள பெரிய பிரபுக்களும் கனவான்களும் நியாயாதிபதிகளுங் கூடிய சபையில் — அதாவது, தன்னுடைய குடிகளின் எதிரில் — எர்மியான் கைதியாக விசாரணைக்குச் சித்தமாகக் கொண்டுவந்து நிறுத்தப்பெற்றாள்.

அந்தத் தருணத்தில் கிளியாமினீசும் தையானும் அங்கே வந்து தோன்றி, அபாலோ கோவிற் பூஜாரிகளின் திருவாக்கு அடங்கிய திருமுகத்தை அரசனிடத்திற் கொடுத்தார்கள். அந்தக் கடிதத்தைத் திறந்து, அதனிலடங்கிய திருவாக்கை உரத்துப் படிக்கும்படி லியான்டீஸ் கட்டளை யிட்டான்.

"எர்மியான் நிரபராதி; பாலிக்ஸினீஸின்மீது குற்றம் இல்லை. காமிலோ உண்மையான ராஜவிசுவாஸி. லியான்டீஸ் பொறாமை மிகுந்த கொடியன். இழந்து போனதைக் கண்டு பிடியாவிட்டால், அரசன் சந்ததி யற்றுப் போவான்"

என்று அந்தத் திருவாக்கு கூறிற்று. அரசன் அந்தத் திருவாக்கைச் சிறிதும் நம்பவில்லை. அது ராணியின் சிநேகர்களால் கற்பிக்கப்பட்டதாக இருக்க வேண்டும் என்று சொல்லி, அரசன் நியாயாதிபதியை நோக்கி, ராணியை விசாரித்துமுறைப்படி நடத்தும்படி கட்டளையிட்டான்.

அவன் அப்படிச் சொல்லிக்கொண் டிருக்கையில் ஒருவன் அந்தச் சபையிற் பிரவேசித்து, "தன் தாயாரின்

மீது குற்றஞ் சாட்டி, அவளைக் கொல்லுவிக்கும் பொருட்டு விசாரணைக்குக் கொண்டுவந்திருக்கும் வர்த்தமானத்தைக் கேட்டு இளவரசராகிய மாமிலஸ் வெட்கமும் துயரமும் மூண்டு பிராணனை விட்டார்'' என்று தெரிவித்தான்.

தன்னுடைய துர்த்தசைக்காகத் துக்கித்து அருமை மகன் உயிர் துறந்த செய்தியைக் கேட்டு எர்மியான் மூர்ச்சித்தாள். தூதன் வந்து சொல்லிய சமாசாரம் லியான்டீஸி னுடைய மனத்தைப் பிளந்தது. அவன் தன் ராணியின் மீது இரக்கப்படத் தொடங்கினன். பாலினவையும், ராணியின் பரிசாரிகைகளையும் அழைத்து, எர்மியானை எடுத்துக் கொண்டுபோய், அவளைத் தேற்றித் தெளிவிக்கும் படி கட்டளை யிட்டான். சிறிது நேரம் சென்ற பிறகு பாலின திரும்பிவந்து எர்மியான் இறந்துபோய்விட்டா ளென்று தெரிவித்தாள்.

ராணி இறந்து போனளென்று தெரிந்த வுடனே, லியான்டீஸ் தான் அவளுக்குச் செய்த கொடுமையை நினைத்துப் பச்சாத்தாபப் பட்டான். தன்னுடைய கொடுமையினுலே அவள் மனமுறிந்து மாண்டாளென்று அவன் நினைத்தானுதலின், அவள் நிரபராதியே!யென்று நம்பினன்.

அபாலோ கோவிற் பூஜாரிகளின் திருவாக்கும் உண்மையே யென்று இப்பொழுது அவன் நினைத்தான். ஏனெனின், "இழந்து போனதைக் கண்டுபிடியாவிட்டால்'' என்று திருவாக்குச் சொல்லியது தன்னுடைய இளம் பெண்ணைக் குறித்தே என்றும், அவளைக் கண்டு பிடியா விட்டால், தனக்குச் சந்ததி யில்லாமற் போகும் என்றும் அவன் தெரிந்து கொண்டான். இப்பொழுது தன் பெண்ணைத் தேடிப் பிடித்துத் திரும்ப அழைத்துக் கொண்டு வருகிறவர்களுக்குத் தன் ராஜ்யத்தையே கொடுப்பதற்

குச் சித்தமானுன். அதுமுதல் அவன் பச்சாத்தாபத்தினுல் வருந்தி, மிகுந்த துக்கத்தில் ஆழ்ந்து, அநேக ஆண்டுகள் கழித்துவந்தான்.

இளவரசியாகிய சிசுவை எடுத்துக்கொண்டு போன அன்டிகோனஸ் ஏறிச் சென்ற கப்பல் புயலினுல் அடிபட்டு, பொகிமியா தேசத்துக் கரையிற்போய் ஒதுங்கியது. பொகிமியா என்பது உத்தமகுணம் வாய்ந்த பாலிக்ஸினீஸ் என்னும் அரசனுடைய ராஜ்யம். அங்கே அன்டிகோனஸ் கரையேறி, அந்தச் சிசுவை அவ்விடத்தில் விட்டுவிட்டான்.

குழந்தையைக் காட்டிற் றனியே விட்டுவிட்டு அன்டிகோனஸ் திரும்பி வந்துகொண் டிருக்கையில், அக் காட்டினின்று ஒரு கரடி வந்து அவன்மீது பாய்ந்து, அவனைச் சின்னுபின்ன மாக்கியது. இவ்வாறு அவன் லியான்டீஸினுடைய கொடிய கட்டளையை நிறைவேற்றியதற்குத் தெய்வம் அவனைத் தக்கபடி சிக்ஷித்தது. அவன் மறுபடி கப்பலேறிச் ஸிஸிலிக்குப்போய்க் குழந்தையை விட்டுவந்த செய்தியை லியான்டீசுக்குச் சொல்ல முடியாமற் போயிற்று.

அந்த இளங்குழந்தையின் ஆடைகள் திவ்வியமாக இருந்தன; மிக விலையுயர்ந்த ஆபரணங்கள் அதன்மீது போடப்பட் டிருந்தன. ஏனெனில், அதை லியான்டீசுக்கு அனுப்பியபோது எர்மியான் சிறப்பான ஆடை ஆபரணங்களை அதற்குப் போட்டிருந்தாள். ஒரு துண்டு காகிதத்தில் அன்டிகோனஸ் பிரபு 'பெர்டிதை' என்னும் பெயரை எழுதி அதை அந்தக் குழந்தையின் ஆடையில் ஒரு மூலையில் தைத்து வைத்திருந்தான்; மற்றும், அந்தக் குழந்தையின் குலப் பிறப்பையும், அதற்கு நேர்ந்த துர்க்கதியையும் ஒருவாறு தெரிவிக்கத்தக்க சில வார்த்தைகளையும் அந்தக் கடிதத்தில் எழுதி வைத்திருந்தான்.

அப்படி அநாதையாக அடவியில் விடப்பட்ட குழந்தையை ஓர் இடையன் கண்டெடுத்தான். அவன் இரங்கிய மனமுடையவன்; அவன் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டுபோய்த் தன் மனைவியினிடத்திற் கொடுத்தான். அவள் அதை அன்புடன் செல்வமாக வளர்த்துவந்தாள். அவன் ஏழையானதனால், தனக்குக் கிடைத்த நிதியை மற்றவர்களுக்குத் தெரியாமல் ஒளித்துவைக்கக் கருதி அவன் அந்த ஊரைவிட்டு வேறு ஊருக்குச் சென்றான்.

அவனுக்குப் பெருந்திரவியம் எப்படிக் கிடைக்குமென்று புதிய ஊரில் எவரும் கேட்கமாட்டார்களாதலால், அவன் அங்கே தைரியமாக வாழ்ந்துவந்தான். பெர்டிதையின்மீதிருந்த நகைகளுட் சிலவற்றை விற்று ஆட்டுமந்தைகள் வாங்கி, அவன் இடையர்களுட் செல்வவானாக விளங்கினான். பெர்டிதையை அவன் தன் குழந்தை எனவே வளர்த்துவந்தான்; தான் இடையனது புதல்வி அல்லவென்று அவளுக்குந் தெரியாது.

குழந்தையாகிய பெர்டிதை அழகிய கன்னிகையாக வளர்ந்து வந்தாள். இடையனுடைய மகளுக்கு எப்படிப்பட்ட கல்வியும் பழக்கமும் வாய்க்குமோ அப்படிப்பட்டவைகளே அவளுக்கு வாய்த்தபோதிலும், இயற்கையாகவே அவளுக்கு அமைந்திருந்த நற்குணங்களும், பெருந்தன்மைகளும், தீவிரபுத்தியும், நல்லொழுக்கமும் நன்று விளங்கின. இவை அவளுக்குத் தாயின் வழியாகப் பிறப்பில் அமைந்தவைகளாகும். அவளைப் பார்த்தவர்கள் அவள் தந்தையாகிய அரசனது அரண்மனையிலே வளர்ந்தவள் என்று சொல்லுவார்களேயல்லாமல், இடையனது வீட்டில் வளர்ந்தவள் என்று சொல்ல முடியாதிருந்தது.

பொஹீமியா தேசத்து அரசனாகிய பாலிக்ஸினீஸுக்கு ஒரே குமாரன் இருந்தான்; அவனுடைய பெயர் பிளாரிசெல்.

அந்த ராஜகுமாரன் இடையன் வீட்டருகில் ஒருநாள் வேட்டையாடிக் கொண்டிருக்கையில், இடையனது மகள் என்று தோன்றிய பெர்டிதையைச்கண்டான். அவளுடைய அழகும், அடக்கமும், ராணிக்குரிய நடையும் அவனது மனத்தைக் கவர்ந்தன. அந்தக் கணமே அவன் அவள்மீது மோகங்கொண்டான். பிறகு, தாரிக்லீஸ் என்னும் பெயர் புனைந்து, சாமானிய மனிதனைப்போல வேஷம் மாறி, அவன் அந்த இடையனுடைய வீட்டுக்கு அடிக்கடி வரத் தலைப்பட்டான்.

அரண்மனையை விட்டுப் பிளாரிசெல்அடிக்கடிவெளியே போவதைத் தெரிந்து, பாலிஸிக்னீஸ் சந்தேகமும் பயமும் எய்தினான். அவன் எங்கே போகிறானென்று கண்டு-பிடிக்கும் பொருட்டு ஆட்களை நியமித்து, அவனுக்குத் தெரியாமல் அவன் பின்னே சென்று கவனிக்கச் செய்-தான். அவ்விதமாக, அவன் இடையனுடைய மகள்மீது காதல் கொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டான்.

பிறகு, பாலிக்ஸினிஸ் தன்னிடத்து மிகுந்த பிரியமும் விசுவாசமும் உள்ள காமிலோவை வரவழைத்து, அந்த இடையனுடைய வீட்டுக்கு அவனுடன் சென்றான்.

லியான்டீசினுடைய மூர்க்கமான கோபத்தினின்றுந் தன் உயிரைக் காப்பாற்றியதுமுதல் பாலிக்ஸினீஸ் அந்தக் காமிலோவினிடத்துப் பரம நம்பிக்கை வைத்திருந்தான். இடையனுடைய வீட்டுக்குப் போகவேண்டுமென்று அவன் சொன்ன உடனே, காமிலோ அதற்கிசைந்து அவனுடன் புறப்பட்டான். அவர்கள் இருவரும் பெர்டிதை என்பவள் இடையனுடைய மகள் என்றே நினைத்திருந்தார்கள்.

பாலிக்ஸினீஸும் காமிலோவும் மாறுவேஷம் பூண்டு இடையனுடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்

பொழுது இடையன் தன் வீட்டில் மேஷரோமாபஹரா-ணப் பண்டிகை கொண்டாடிக் கொண்டிருந்தான். அன்றையதினம் ஆடுகளின் ரோமங்களைக் கத்தரித்து எடுப்பது முக்கியமான காரியம். அதன் சம்பந்தமாகப் பண்டிகை கொண்டாடுவதில் பந்துக்களையும், சிநேகர்களையும், மற்று-முள்ளவர்களையும் அழைத்துப் போஜனம் முதலியவை அளித்துச் சந்தோஷமாகக் காலங் கழிப்பது வழக்கம். அந்நியர்களையும் உபசரித்து வித்தியாசமின்றி வீட்டுக்குள் ஏற்று மகிழ்வுடன் விருந்து கொண்டாடுவது உண்டு.

உற்சாகமும், வேடிக்கையும், விநோதமும், சந்தோஷமும் எங்கும் நிறைந் திருந்தன. எப்புறத்திலும் இனிமை குடிகொண் டிருந்தது. குப்பக்காட்டுப் பண்டிகைக்குரிய விநோதங்க ளெல்லாம் அமைக்கப்பட் டிருந்தன; விருந்துச் சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுக ளெல்லாஞ் செய்யப் பட் டிருந்தன. வீட்டுக் கெதிரிலுள்ள புல்வெளியிற் சில சிறுவர்களும், சிறுமிகளும் நர்த்தனம் செய்துகொண் டிருந்தார்கள்; மற்றுமுள்ள இளைஞர்கள் வீட்டுவாசலில் வந்திருந்த அங்காடிக்காரர்க ளிடத்தில் நாடாக்கள், கையுறைகள், மற்றுமுள்ள விளையாட்டுப் பண்டங்கள் முதலியவைகளை வாங்கிக்கொண் டிருந்தார்கள்.

இப்படி எல்லா இடத்துங் கூச்சலுங் கொந்தளிப்பும் மிகுந்திருக்க, பிளாரிசெல்லும் பெர்டிதையும் ஒதுப்புறமாக ஒரு மூலையில் தனியே உட்கார்ந்திருந்தார்கள். சுற்றுமுற்றும் நடந்துகொண்டிருந்த விளையாட்டுகளிலும் வீண் பொழுதுபோக்குகளிலும் மனத்தைச் செலுத்தப் பிரியப் படாமல், அவர்களுடைய சம்பாஷணத்தினாலே மிகுந்த சந்தோஷம் எய்துவதாக அவர்கள் தோன்றினார்கள்.

மகனாகிய பிளாரிசெல் தன்னை அடையாளங் கண்டு கொள்ளாதவாறு பாலிக்ஸினீஸ் நன்றாக வேஷம் மாறி

யிருந்தான். ஆகையால், அவன் தைரியமாக அவர்களண்டையிற் சென்று, அவர்கள் பேசும் வார்த்தைகளைக் கவனித்துக்கொண்டிருந்தான். இனிமையாகவும், வெள்ளுரையாகவும் பெர்டிதை தன் மகனோடு பேசிய அழகைக் கண்டு பாலிக்ஸினீஸ் மிக ஆச்சரியப்பட்டான். அப்போது காமிலோவைப் பார்த்து, "இழிகுலத்திற் பிறந்து இவ்வளவு சிறப்புஞ் செம்மையும் வாய்ந்த சிறுமியை யான் இதுகாறுங் கண்டதில்லை. இவளுடைய செய்கைகளும் பேச்சும் பிறவும் இவளுடைய அந்தஸ்துக்கு அதிகமாகக் காணப்படுகின்றன. இவ்வளவு பெருந் தன்மையும், சீலமும், சிறப்பும் இந்த இடத்திற்குப் பொருந்தா" என்று சொன்னான். "நற்குணங்களை யெல்லாங் கடைந்தெடுத்த வெண்ணெயே ஆவள் இவள்" என்று காமிலோ பதில் உரைத்தான்.

பிறகு, கிழ இடையனை நோக்கி, "நண்ப! உன் மகளோடு பேசிக்கொண்டிருக்கிற இடைப்பிள்ளை யாவன்?" என்று அரசன் வினவினான். அதற்கு இடையன், "அவனை தாரிக்லீஸ் என்பார்கள். அவன் என் மகளின்மீது காதல் கொண்டிருப்பதாகச் சொல்கிறான். உண்மையாகப் பார்க்கின், அவர்களிருவரும் மிக அந்நியோந்நியமாக இருக்கிறார்கள். அவன் அவள்மீது வைத்திருக்கிற ஆசை அதிகமா, அவள் அவன்மீது வைத்திருக்கிற ஆசை அதிகமா என்று சொல்ல முடியவில்லை. தாரிக்லீஸ் என்னும் இந்த இளைஞன் அவளைப் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டால், அவன் சிறிதும் எதிர்பாராததொன்று அவனுக்குக் கிடைக்கும்" என்று விடை கூறினான். தாரிக்லீஸ் எதிர்பாராததென்று இடையன் குறிப்பிட்டது பெர்டிதையின் ஆபரணங்களாகும். அவைகளிற் சிலவற்றை விற்று அவன் ஆடுகள் வாங்கிக் கொண்டதுபோக மிகுந்தி

ருந்ததை யெல்லாம் அவளுக்குச் சீதனங் கொடுப்பதற்காக அவன் பத்திரப்படுத்தி வைத்திருந்தான்.

பிறகு, பாலிக்ஸினீஸ் தன் மகனைப்பார்த்துப் பேசத் தொடங்கினன். "இளைஞனே! என்ன சமாசாரம்? பண்டிகை கொண்டாடாமல் நீ இப்படித் தனியே இருக்கக் காரண மென்ன? நீ வேறு விஷயங்கள் எவைகளையோ நினைத்துக்கொண் டிருப்பதாகத் தோன்றுகிறது.

"நான் இளைஞனாக இருந்தபோது என் காதலிக்கு எத்தனையோ வெகுமதிகள் கொடுப்பேன். அவளைச் சந்தோஷப்படுத்தும் பொருட்டுப் பற்பல விநோதமான சாமான்களை வாங்கிக் கொடுப்பேன். அப்படி யிருக்க, நீ உன் காதலிக்கு ஒன்றும் வாங்கிக் கொடாமல் அந்த அங்காடிக்காரனைப் போகவிட்டாயே'' என்றான்.

அப்படித் தன்னைக் கேட்டவன் தன் தகப்பனாகிய அரசனென்று சிறிதும் நினையாமல் ராஜகுமாரன், "முதியோரே! அப்படிப்பட்ட அற்பப் பண்டங்களில் இவள் பிரியப்படமாட்டாள். பெர்டிதை என்னிடத்தினின்று எதிர்பார்க்கும் வெகுமதிகள் என் இதயமாகிய பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டிருக்கின்றன'' என்று பதில் சொல்லி விட்டுப் பெர்டிதையைப் பார்த்து, "என் அன்பே! இந்த முதியோர் முன்னிலையில் நான் சொல்வதைக் கேள். இவரும் ஒருகாலத்து ஒருத்தியைக் காதலித்து இருந்தவராம். என்னுடைய காதல் விசேஷத்தை இவருங் கேட்கட்டும்'' என்று சொன்னன.

பிறகு, பெர்டிதையைத் தான் கலியாணஞ் செய்வதாகப் பிளாரிசெல் பிரமாணஞ் செய்து, தன்னுடைய உறுதி வாக்குக்கு அந்தக் கிழவரைச் சாக்ஷியாகக் கோரி, பாலிக்ஸினீஸைப் பார்த்து, "ஐயா! எங்களுடைய விவாக ஒப்பந்தத்தைக் கவனியுங்கள்'' என்று சொன்னான்.

உடனே அரசன் தன் மாறுவேஷத்தை நீக்கி, உண்மையான ரூபத்தோடு அரசனாக விளங்கி, "இளைஞனே! உங்களுடைய விவாக விலக்கைக் கவனிப்பாயாக" என்றான். இழிகுலத்திற் பிறந்த அந்தக் கன்னிகையை விவாகம் பண்ணிக்கொள்ள ஒப்பந்தம் செய்யத் துணிந்ததற்காகத் தன் மகனைப் பாலிக்ஸினீஸ் மிகவும் நிந்தனையாகப் பேசிக்கண்டித்தான். மற்றும், 'இடைச் சிறுக்கி,' என்றும் 'ஆட்டுக்குட்டி' என்றும், இன்னும் பற்பல அவமரியாதையான பெயர்கள் வைத்துப் பெர்டிதையைத் திட்டினான். பெர்டிதையைப் பார்த்து, "இனி என் மகன் உன்னை வந்து பார்ப்பதற்கு நீ இடங் கொடுப்பாயாகில், உன்னையும் உன் தந்தையாகிய கிழ இடையனையுங் குரூரமாகக் கொல்லுவிப்பேன்" என்று பயமுறுத்தினான்.

இளவரசனாகிய பிளாரிசெல்லை அழைத்துக்கொண்டு தன்னுடன் வரும்படி காமிலோவுக்குக் கட்டளையிட்டு அரசன் மிகுந்த கோபாவேசத்தோடு இடையன் வீட்டினின்று புறப்பட்டான்.

பாலிக்ஸினீஸ் தன்னை இழித்துரைத்ததனால் பெர்டிதைக்கு மிகுந்த கோபம் மூண்டது. ராஜ வம்சத்திற் பிறந்தவளாதலின், அவளுடைய இரத்தம் கொதிப்புற்றது. அரசன் நீங்கிப்போன பிறகு அவள், "நமக்கு என்ன கெடுதி வருவதாயிருந்தாலும் நான் சிறிதும் அஞ்சவில்லை. இரண்டொரு தடவை பேசுவதற்கும் வாயெடுத்தேன். அவனுடைய அரண்மனையின்மீது பிரகாசிக்கிற சூரியன் நமது குடிசையின்மீது பிரகாசிக்க மாட்டேனென்று முகத்தைத் திருப்பிக்கொள்ளாமல் இரண்டிடத்திலும் ஒரே மாதிரியாகவே பிரகாசிக்கிறான் என்று தெளிவாக அவனுக்கு எடுத்துக் காட்டவேண்டுமென்று நினைத்தேன்" என்று சொன்னாள்.

உடனே, அவள் மனமுறிந்து துக்கம் மேற்கொண்டு, "நான் இதுவரையிற் கண்ட கனவு இப்பொழுது நீங்கி விட்டது; எனக்குத் தெளிவான நினைவு வந்துவிட்டது. இனி நான் அதைப்பற்றிப் பௌர்ஷம் பாராட்டமாட்டேன். என்னை விடும், ஐயா! நான் போய் ஆடுகளைக் கறந்துவிட்டுத் தனியே இருந்து அழவேண்டும்" என்று சொன்னாள்.

பெர்டிதையின் வீர லக்ஷணத்தையும், பெருந் தன்மையையும், நடவடிக்கையின் நயத்தையுங் கண்டு, சற்குண சீலனாகிய காமிலோ மிகவும் சந்தோஷப்பட்டான். அவள்-மீது ராஜகுமாரன் மிகக் காதல்கொண் டிருக்கிறானென்றும், தந்தையாகிய அரசனது ஆணையின்படி அந்த மோகத்தை விட்டொழிக்க மாட்டாதவனாயிருக்கிறானென்றும் காமிலோ தெரிந்துகொண்டு, அந்தக் காதலர்கள் இருவரிடத்தும் நட்பு கொண்டாடவும், தன் மனத்திற் பிரியமாக மேற்கொண்ட யுக்தியொன்றைச் செய்து முடிக்கவுந் தீர்மானித்தான்.

சிசிலிதேசத்து அரசனாகிய லியான்டீஸ் என்பவன் தான் செய்த கொடுமைகளுக்காகப் பச்சாத்தாபப்பட்டு வருந்திக்கொண் டிருக்கிறானென்று காமிலோவுக்கு நெடு நாளாகத் தெரியும். இப்பொழுது பாலிக்ஸினீஸ் என்னும் அரசனுக்கு அந்தரங்கமான சிநேகனாகக் காமிலோ இருந்த போதிலும், பூர்வத்து யஜமானனையுந் தன் ஊரையும் மறுபடி ஒருமுறை போய்ப் பார்த்து வரவேண்டுமென்று ஆசைப்படாமல் இருக்க முடியவில்லை. ஆகையால், அவன் பிளாரிசெல்லையும் பெர்டிதையையும் நோக்கி, "நீங்கள் இருவரும் என்னுடன் சிசிலி ஸம்ஸ்தானத்திற்கு வாருங்கள். உங்களை லியான்டீஸ் மன்னன் காப்பாற்றும்படி ஏற்பாடு

செய்து வைக்கிறேன். பிறகு, அந்த மன்னனைக்கொண்டு பாலிக்ஸீனீஸுக்கு உங்களைப் பற்றிச் சிபாரிசு செய்வித்து, நீங்கள் விவாகஞ் செய்துகொள்வதற்கு அவருடைய சம்மதம் வாங்கித் தருகிறேன்" என்றான்.

இந்த ஆலோசனைக்கு அவர்கள் இருவரும் சந்தோஷமாக இணங்கினார்கள். அவர்கள் ஊரைவிட்டு ஓடிப் போவதற்கு வேண்டிய அநுகூலங்களையெல்லாம் அமைத்த காமிலோ என்பவன் அவர்களோடு அந்தக் கிழ இடையனும் போவதற்கு இடங் கொடுத்தான்.

இடையன் புறப்படும்பொழுது பெர்டிதையின் ஆபரணங்களில் மிகுந்திருந்தவைகளையும், சிசுவாக இருந்த பொழுது அவள் அணிந்திருந்த ஆடைகளையும், அவைகளிற் சொருகி வைத்திருந்த கடிதத் துண்டையும் எடுத்துக் கொண்டான்.

சுகமாக யாத்திரை செய்து, பிளாரிசெல், பெர்டிதை, காமிலோ, கிழ இடையன் ஆகிய நால்வரும் க்ஷேமமாக லியான்டீசினுடைய ராஜசபைக்கு வந்து சேர்ந்தார்கள். இறந்துபோன எர்மியானுக்காகவும், இழந்து போன குழந்தைக்காகவும் இன்னுந் துக்கித்துக் கொண்டிருந்த லியான்டீஸ் மன்னன் மிகுந்த அன்போடு காமிலோவின் வரவை யேற்று, ராஜகுமாரனாகிய பிளாரிசெல்லுக்குத் தக்க உபசாரங்கள் செய்தான். பெர்டிதை தன்னுடைய ராணியென்று பிளாரிசெல் அரசனிடத்திற் சொன்னான். அந்த வார்த்தையைக் கேட்டபோதிலும், லியான்டீஸினுடைய மனம் பெர்டிதையின்மீதே நாட்டமாக இருந்தது. அவளுக்கும் இறந்துபோன ராணியாகிய எர்மியானுக்கும் முகச்சாயை முதலியன ஒத்திருந்தமையின், அவனுக்குத் துக்கம் மறுபடி புதிதாக மூண்டெழுந்தது.

அப்பொழுது அவன், "நான் பதறிக் குரூரமாகக் கொன் றிராவிடின், என் மகளும் இவ்வளவு மனோகரமான சுந்தரி யாகவே இருப்பாள்" என்று கூறினாள்.

மற்றும், "அந்தக் காலத்தில் எனக்கு மற்றொரு கஷ்டமும் நேர்ந்தது. அதாவது, வீரனாகிய உன்னுடைய தந்தையின் சிநேகத்தையும் சகவாசத்தையும் இழந்தேன். இப்பொழுது அவனைப் பார்க்க வேண்டுமென்று மிகுந்த ஆவல் கொண்டிருக்கிறேன்; அவன் என் உயிரினும் இனி மையானவன்" என்று பிளாரிசெல்லைப் பார்த்து லியான் டீஸ் சொன்னான்.

பெர்டிதையை அரசன் மிகவும் கவனித்துப் பார்த் ததையும், அவன் தன் மகளை இழந்ததையும், அந்த மகள் இளமைப் பருவத்திற் காட்டில் விடப் பட்டதையுங் கிழ இடையன் தெரிந்து, பெர்டிதையைத் தான் கண்டெடுத்த காலத்தையும், அவள் காட்டில் தனியே விடப்பட்டிருந் ததையும், அவளுடைய உயர்குலப் பிறவிக்குரிய ஆபரணங் களையும், மற்ற அடையாளங்களையும் தன் மனத்தில் ஆலோ சித்து ஒப்பிட்டுப் பார்க்கலானான். அப்படிப் பார்த்ததில், பெர்டிதை என்பவள் அரசன் இழந்துபோன பெண்ணே யென்று அவன் தீர்மானிக்க வேண்டியதாயிற்று.

அப்பொழுது அவன் அரசனது முன்னிலையில் அந்தச் சந்தர்ப்பங்களை யெல்லாம் எடுத்துக் கூறினான். அந்தச் சமயத்தில் அங்கே பிளாரிசெல், பெர்டிதை, காமிலோ, உத்தமியாகிய பாலினா ஆகிய இவர்களும் இருந்தார்கள். குழந்தையைத் தான் கண்டெடுத்த விதத்தையும், அன்டி கோனஸின்மீது கரடி பாய்ந்து அவனைக் கொன்ற சந்தர்ப் பத்தையுங் கிழ இடையன் விரித் துரைத்தான். அந்தக் குழந்தையின்மீது இருந்த விலையுயர்ந்த ஆடைகளை எடுத் துக் காட்டினான்.

அந்த ஆடைகளை எர்மியான் தன் குழந்தையின் மீது போட்டது பாலினுவுக்கு ஞாபகம் வந்தது. அவன் ஒரு நகையை எடுத்துக் காட்டினான். அந்த நகையைப் பெர்டிதையின் கழுத்தில் எர்மியான் சூட்டியதாகப் பாலினு ஞாபகமாகச் சொன்னாள். பிறகு, அவன் குழந்தையின் ஆடையி லிருந்த கடிதத் துண்டை எடுத்துக் காட்டினான். அது தன் கணவனுடைய கை யெழுத்தென்று பாலினு நிச்சயமாகத் தெரிந்து சொன்னாள்.

இவைகளை யெல்லாங் கண்ட பிறகு, பெர்டிதை என்பவள் லியான்டீசின் மகளே என்பதற்கு ஐயமில்லாதா யிற்று. ஆனால், பாலினுவின் மனத்தில் துக்கம் ஒரு புற மும், சந்தோஷம் மறுபுறமும் வாதித்து அவளைக் குழப் பின. தன் கணவன் இறந்தானென்று தெரிந்து அவள் துக்கித்தாள்; அபாலோவின் திருவாக்குப் பலித்தது, இழ ந்துபோன ராஜகுமாரி கண்டெடுக்கப் பட்டாள், ஆதலின் அரசனுக்குச் சந்ததி ஏற்பட்டது என்று அவள் சந்தோ ஷப் பட்டாள்.

பெர்டிதை தன் மகள் என்று கேட்ட வுடனே, எர்மியான் தன் குழந்தையை இப்போது கண்டு களிப்ப தற்கு ஜீவித்திருக்க வில்லையே என்னும் துக்கம் மேலிட்டு லியான்டீஸ் நெடுநேரம் ஒன்றும் பேச மாட்டாதவனாய், "ஐயோ, உன் தாய்! உன் தாய்!" என்று மாத்திரம் கூவி அழுதான்.

மனத்தை வருத்துவதாயினும், மங்களகரமாக இரு ந்த அந்தச் சமயத்தில் பாலினு என்பவள் லியான்டீஸைப் பார்த்து, "இறைவ! சிற்ப வித்தையிற் சிறந்த ஆசிரிய னாகிய ஜூலியோ ரொமேனோ என்னும் இற்றுலிய சாஸ்திரி யைக் கொண்டு நான் ஒரு பிரதிமை செய்வித் திருக்கிறேன்.

அது இப்பொழுதே தீர்ந்துவந்திருக்கிறது. அது ராணி எர்மியானுடைய சரியான பிரதிமையாகும். தாங்கள் தயவு செய்து என் வீட்டுக்கு விஜயஞ்செய்து அதனைப் பார்ப்பீர்களாயின், அது எர்மியானே என்று நீங்கள் நினைப்பீர்கள் என்று நிச்சயமாகச் சொல்லுவேன்" என்றாள்.

எர்மியானுடைய பிரதிமையைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் அரசனுக்கு மிகுந்தது. தான் கண்ணிற் காணாத தாயின் உருவம் எப்படி யிருந்திருக்கும் என்று தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் பெர்டிதைக்கு மிகுந்தது.

எல்லாருமாகக் கூடிப் பாலினாவின் வீட்டிற்குப் போனார்கள். அங்கே அவள் அவ்வளவு சிறப்பித்துச் சொல்லி யிருந்த பிரதிமையை மறைத்து ஒரு திரை தொங்கிற்று. அவள் அந்தத் திரையை ஒதுக்கின வுடனே, அது எர்மியானைப் போலவே இருந்ததனால் அரசனுக்குத் துக்கம் அதிகமாக மூண்டெழுந்தது; நெடுநேரம் அவன் பேசவும் முடியவில்லை, நகரவும் முடியவில்லை, ஸ்தம்பித்துப்போனான்.

"இறைவ! தங்களுடைய மௌனம் நன்றாக இருக்கின்றது; அது தங்களுக்குண்டா யிருக்கும் ஆச்சரியத்தை நன்கு விளக்குகின்றது. இந்தப் பிரதிமை தங்களுடைய ராணியைப்போலவே இல்லையா ?" என்று பாலினா அரசனைக் கேட்டாள்.

சிறிது நேரம் பேசாதிருந்து முடிவில் அரசன் "ஓ! முதல் முதல் நான் அவளை மணங்கேட்கப் போனபோதும் இவ்வளவு கம்பீரமாகவே அவள் நின்றுகொண்டிருந்தாள். ஆயினும், பாலினா! இந்தப் பிரதிமையிற் காண்கிறது போல எர்மியான் இவ்வளவு வயது முதிர்ந்திருக்க வில்லை"

என்று சொன்னுன். "அவ்வளவுக் கவ்வளவு சிற்பியின் திறமை வெளிப்படுகின்றது. எர்மியான் இப்போது ஜீவித்திருந்தால் எப்படி யிருப்பாளோ அப்படிப் பிரதிமை செய்திருக்கிறுன். அது இருக்கட்டும்; ஐயா! திரையை இழுத்துப் பிரதிமையை மூடுகிறேன்; இல்லாவிட்டால், அது அசைகிறதென்றும் நீங்கள் நினைக்கக் கூடும்" என்று பாலினு பதில் மொழிந்தாள்.

அரசன் — திரையை இழுக்காதே! நான் இன்னும் உயிரோ டிருக்கிறேனே! நான் இறந்து போயிருக்க லாகாதா! காமிலோ! இதோ பார், இந்தப் பிரதிமை மூச்சு விட்டதென்று நீ நினைக்கமாட்டாயா? இவளுடைய கண்களில் அசைவு காண்கின்றதே.

பாலினு — இறைவரே! இனி நான் திரையை இழுத்து விடவேண்டும். ஏனெனில், நீங்கள் பரவசராக இருக்கிறீர்கள்; இந்தப் பிரதிமை உயிர்த்திருக்கிறதென்று நினைத்தாலும் நினைப்பீர்கள்.

அரசன் — அப்படியே நான் நினைக்கும்படியாக அருளாயா? தேன்மொழியே! இவளிடத்தினின்று மூச்சுவருவதுபோல் இருக்கின்றதே. மூச்சுவிடுவது போலப் பிரதிமை செதுக்குவதற்கு எவ்வளவு நுட்பமான உளி வேண்டியிருக்கும்? என்னை ஒருவரும் பரிகாசஞ் செய்ய வேண்டாம். இவளை முத்தமிடப் போகிறேன்.

பாலினு — பிரபுவே! பொறுங்கள், சற்று நிதானியுங்கள். இவளுடைய உதட்டில் தீட்டியுள்ள வண்ணம் இன்னும் உலரவில்லை. இப்பொழுது முத்தமிட்டால் உங்கள் உதட்டில் வண்ணக் கறை படும். திரையை இழுக்கட்டுமா?

அரசன் — வேண்டாம், வேண்டாம், திரையை இழுக்காதே.

பேர்டிதை — என் அருமைத் தாயைப் பார்த்துக் கொண்டே எத்தனை நேரமாயினும் இப்படியே நின்று கொண்டிருப்பேன்.

பாலினு — இந்த மோகாவேசத்தைத் தணித்துக் கொள்ளுங்கள். நான் திரையை இழுத்து விடுகிறேன்; இல்லையெனில், இதனினும் மிக்க ஆச்சரியத்தைக் காண்ப தற்குச் சித்தமாகுங்கள். இந்தப் பிரதிமை உண்மையாக நகரும்படி செய்வேன் — அம்மட்டேயோ ? அந்தப் பீட த்தினின்று இறங்கி வந்து உங்கள் கையைப் பிடித்துக் கொள்ளும்படி செய்வேன். அப்படிச் செய்தால், ஏதோ துர்த் தேவதைகளின் சகாயத்தினுல் நான் இந்தப் பிரதி மையை ஆட்டுவிக்கிறேன் என்று நீங்கள் நினைப்பீர்கள். நான் அப்படிப்பட்ட மந்தரக்காரி அல்லள்.

அரசன் — இவளை நீ என்ன செய்விக்கிருயோ, அதைப் பார்த்துத் திருப்தி அடைகிறேன். இவளை என்ன பேச வைக்கிருயோ அதைக் கேட்டு ஆநந்த மடைகிறேன். நகரச் செய்யுந் திறமையுடையவள் பேசச் செய்வது எளி தேயாமன்ருே ?

மற்ருேர் அறையில் பாலினு வாத்தியக்காரர்களை நிறுத்தி வைத்திருந்தாள். இந்த மாதிரியான சமயம் நேரும் என்று எண்ணி அதற் கேற்றபடி கம்பீரமான ராகங்களை வாசிக்கும்படி அவர்களுக்குத் திட்டஞ் செய்வித் திருந்தாள். அவள் சைகை காட்டின வுடனே வாத்தியக்காரர்கள் அந்த ராகங்களை வாசிக்கத் தொடங்கினுர்கள். அப் பொழுது எல்லாரும் ஆச்சரியப் படும்படி அந்தப் பிர திமை பீடத்தை விட்டு இறங்கி நிதானமாக நடந்து வந்து லியான்டீஸினுடைய கழுத்தில் இரு கரங்களையும் போட்டுத் தழுவிக் கட்டிக் கொண்டது.

பிறகு, பிரதிமை பேசத் தொடங்கியது; தன் கணவனையும், புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட தன் குழந்தையாகிய பெர்டிதையையும் ஆசீர்வதிக்கும்படி தெய்வத்தைப் பிரார்த்தித்தது. அந்தப் பிரதிமை லியான்டீஸைக் கட்டித் தழுவியதும், தன் கணவனையும் மகளையும் வாழ்த்தும்படி பிரார்த்தித்ததும் அதிசயமாமோ? அதிசயமாகாது; ஏனெனில், பிரதிமை என்று சொல்லியது உண்மையான எர்மியானே, ஜீவித்திருக்கும் உண்மையான ராணியே!

முன்னால் எர்மியான் இறந்துபோனாளென்று பாலினா அரசனுக்குத் தெரிவித்தது பொய்யாகும்; தம் ராணியின் உயிரைக் காப்பாற்றுவதற்கு அதைத் தவிர வேறு வகை இல்லையென்று நினைத்து அவள் அப்படிப் பொய் சொன்னாள். அதுமுதல் எர்மியான் பாலினாவின் வீட்டிற் சௌக்கியமாக ஜீவித்து வந்தாள். பெர்டிதை அகப்பட்டாள் என்னும் செய்தி தனக்கு எட்டுகிறவரையில் தான் பிழைத்திருப்பது லியான்டீஸுக்குத் தெரியக் கூடாதென்று அவள் மறைந்திருந்தாள். ஏனெனில், அவன் தனக்குச் செய்த தீமைகளைப் பொருட்படுத்தாமல் மறந்து ஒழித்தனளாயினும், தன்னுடைய கைக்குழந்தையாகிய பெர்டிதைக்கு அவன் செய்த கொடுமையை அவள் மறக்க முடியவில்லை.

மரித்த ராணி உயிர்த்தெழுந்ததும், காணமற்போன மகளைக் கண்டதும் லியான்டீசுக்குப் பெருமகிழ்ச்சி விளைத்தன. நெடுங்காலமாகத் துக்கத்தில் ஆழ்ந்து கிடந்த லியான்டீஸ் இந்த அதிக ஆனந்தத்தைத் தாங்க முடியவில்லை.

எப்புறத்திலும் எல்லாரும் ஆசி கூறி அன்புடன் மொழிந்தார்கள். எளிய குலத்துப் பெண்ணைப் போலத்

தோற்றிய தங்கள் மகளை மணக்கவிசைந்ததற்காகப் பொரி செல் இளவரசனை லியான்டீசும் எர்மியானும் வியந்து கொண்டாடி, தங்கள் குழந்தையைக் காப்பாற்றிவந்ததற் காக அந்தக் கிழ இடையனை வாழ்த்தினார்கள். காமிலோ வும் பாலினாவும் தாங்கள் விசுவாஸபூர்வகமாகச்செய்த நற் காரியங்களெல்லாம் பலித்து நல் முடிவுக்கு வந்ததைக் கண்டு பெருமகிழ் வுற்றார்கள்.

விந்தையாகவும் எதிர்பாராமலும் நேர்ந்த இந்தக் களிப்பை ஒரு விதத்திலுங் குறைவு படுத்தாதிருக்கும் பொருட்டே போலும், பொகீமியா தேசத்து அரசனாகிய பாலிக்ஸினீஸ் அந்தச் சமயத்தில் அரண்மனைக்குட் பிர வேசித்தான்.

ஸிஸிலிக்குத் திரும்பிப் போக வேண்டுமென்று நெடு நாளாகக் காமிலோ ஆசைப்பட்டுக் கொண்டிருந்தது பாலிக் ஸினீஸுக்குத் தெரியுமாதலின், தன்மகனும் காமிலோவும் அகப்படவில்லை யென்றபோதே அவர்கள் ஸிஸிலிக்குப் போயிருப்பார்களென்று அவன் ஊகித்தான்.

அந்த எண்ணங்கொண்டு அவன் மிக வேகமாகப் பிரயாணஞ் செய்து மிகவும் மங்களகரமான இந்தத் தரு ணத்தில் லியான்டீஸினுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந் தான்.

அரண்மனையிற் குடி கொண்டிருந்த பெருமகிழ்ச்சியில் பாலிக்ஸினீஸும் ஆழ்ந்து, தன்மீது அநியாயமாக லியான் டீஸ் கொண்டிருந்த பொறாமைக்காக அவனை மன்னித் தான். அவர்கள் இருவரும் எப்பொழுதும் போல வாலி பத்து வாஞ்சையுடன் அந்நியோந்நியமாக நேசமுற்று அன்பு பாராட்டினார்கள்.

இப்பொழுது தன் மகள் பெர்டிதையை மணப்பதற்குப் பாலிக்சினீஸ் ஆக்ஷேபிப்பானே? இப்பொழுது அவள் "இடைச் சிறுக்கி" அல்லள், ஸிஸிலி மகாராஜ்யத்து இளவரசி யாவள்.

இவ்வாறு, நெடுங்காலம் பொறுமையுடன் கஷ்டங்களை அநுபவித்துவந்த சீலவயதியாகிய எர்மியான் க்ஷேமப் பட்டதைக் கண்டோம். ராணிகளுட் சிறந்தவளாகவும், தாய்மாரில் அன்பு மிகுந்தவளாகவும் லியான்டீசுடனும் பெர்டிதையுடனும் அந்த உத்தமி நெடுங்காலம் வாழ்ந்து வந்தாள்.

